REGD. No. TN MS (C) 244 ✻ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 ✻ 4 பக்கம் விலை 30 காசு

**உழவன்**

உழவனின் உள்ளத்திலே புயல் இருக்குமானால் வயலிலே வளம் காண முடியாது.
உழைப்புக்கு மதிப்பளித்து வந்தால்தான் உற்பத்திப் பெருகும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**உண்மை**

நமக்கு அப்பாலுள்ள பேராற்றலை நான் அல்லாவென்றோ ஆண்டவன் என்றோ அழைக்கவில்லை அதை நான் உண்மையென்றே அழைக்கிறேன்.

—அண்ணல் காந்தி

மலர்: 2 (★) சென்னை 15—10—1978 ஞாயிறு (✻) (★) (✻) (★) (✻) வெளியூர் 16—10—1978 திங்கள் (✻) இதழ்: 352

## சொன்னார்கள்...! செய்தார்களா?

"ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம்" இப்படிக் கோஷங்கள் எத்தனையோ முறை எழுப்பப்பட்டதுண்டு.

ஆனால் நடைமுறை என்ன?

ஒரு தொழிற்சங்கத் தேர்தலில் தான் தோற்றுவிட்டாலோ - தனது கட்சி தோற்றுவிட்டாலோ - "ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம்" என்று கோஷம் எழுப்புவதும் - தனது சங்கத்திற்கு மட்டும் தான் அங்கீகாரம் அளிக்க வேண்டும் என்று வாதாடுவதும்- உழைக்கும் மக்களின் வாழ்க்கையைப் புனருத்தாரணம் செய்ய தாங்கள் மட்டுமே புறப்பட்டு இருப்பதாக தம்பட்டம் அடிப்பதும் தொழிலாகப் பலருக்கு அமைந்து விட்டது.

பொதுத்தேர்தலில் தானும் தனது கட்சியும் வெற்றி பெற்றுவிட்டால் இறுமாப்பு

### இதோ ஒரு முன்னுதாரணம் [2]

அடைவதும்-தோற்றுவிட்டால் தேர்தல் முடிவுகளை வைத்துக்கொண்டு "பிரேத பரிசோதனை" நடத்தி தனது கட்சி இத்தனை சதவீத வாக்குகள் பெற்றது- "விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறை" வேண்டும் என்று சில அரசியல் தலைவர்கள் கூக்குரல் கொடுப்பது போல. தொழிற்சங்கத் தேர்தலில் தான் வெற்றி பெற்றால்-அதைத் "தொழிலாளர் வர்க்க வெற்றி" என்று வர்ணிப்பதும்-தோற்றுவிட்டால்-தனது சங்கத்திற்கு மட்டுமே அங்கீகாரம் அளிக்க வேண்டும் என்று முரண்படுவதும்-அல்லது தேர்தல் முறையே ஒட்டு மொத்தமாக "முதலாளித்துவ மோசடி" என்று "கண்டு பிடித்தலும்" தொழிற் சங்கத் தலைவர்களின் வாடிக்கையானதால் பல்வேறு பிரச்சினைகள் எழுந்தன.

**கார்க்கி**

தொழிற்சங்க இயக்கங்களும் - தொழிற்சங்கத்தலைவர்களும் எங்கே சென்று கொண்டு இருக்கிறார்கள் என்பதை நாம் சொல்லித் தெரிந்து கொள்ளும் அளவிற்கு நாடு இல்லை.

அந்தத் தொழிற்சங்கத் தலைவர்களுக்கு ஏராளமான விளம்பரங்கள் தாராளமாகக் கிடைக்கின்றன இதற்சாகவே சில பத்திரிகைகளில் "துடித்த எழுத்துக்களை" தயாராக வைத்து இருக்கின்றனா.

போகட்டும்.

அண்ணா தொழிற்சங்கப் பேரவையின் தீர்மானங்களைப் பற்றி கட்டுரைத்தொடர் துவங்கும் போதே பல்வேறு சம்பவங்கள் நடந்துள்ளன.

ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம் என்பதை

(2-ம் பக்கம் பார்க்க)

# குறைந்த விலையில் தரமான பொருட்களை விற்க
# கூட்டுறவுத் துறையில் நியாய விலைக்கடைகள்
# ரூபாய் 3 கோடி ஒதுக்கீடு

## அமைச்சர் கே.ஏ.கே. அறிவிப்பு

மதுரை, அக் 15- புரட்சித்தலைவரின் தேர்தல் வாக்குறுதியை செயல் வடிவமாக்கும் கழக அரசு, கோவை சேலம் மாவட்டங்களில் ஏழைமக்களுக்கு தரமான பொருட்களை விற்பனை செய்யும் நியாயவிலை கடைகளை திறக்க கூட்டுறவு துறையின் மூலம் 3கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறது.

மதுரையில் இன்று (ஞாயிற்றுக்கிழமை) நிருபர்களுக்கு பேட்டியளித்த கூட்டுறவு அமைச்சர் கே. ஏ. கே. மேற்கண்ட தகவலை தெரிவித்தார்.

கூட்டுறவு நியாயவிலை கடைகள் மூடப்படும்என்று சில பத்திரிகைகளில் வெளிவந்த செய்தியையும் அவர் மறுத்தார்:

நிருபர்களிடம் அமைச்சர் கே. ஏ. கே. கூறியதாவது:-

எல்லா கிராமமக்களுக்கும் அத்தியாவசியமான பொருள்களுடன் நுகர்வோர் பொருள்களும் நியாயமானவிலையில்தட்டுப்பாடின்றி கிடைக்கதற்போது தமிழகஅரசு ஒவ்வொரு வருவாய் கிராமத்திற்கும் ஒவ்வொரு நியாய விலைக் கடையுடன்ஒருநுகர்வோர் விற்பனை அங்காடியும் திறக்கப்பட்டு முன்னோடித் திட்டமாக மதுரை ராமநாதபுரம் மாவட்டங்களில் கூட்டுறவுத் துறை மூலம் செயல்படுத்தி வருகிறது.

### விலைகள் குறைந்தன

ஏற்கனவே மதுரை மாவட்டத்தில்செயல்பட்டு வந்த 506 நியாய விலைக் கடைகளுடன் புதிதாக447 கடைகளும், ராமநாதபுரம் மவாட்டத்தில் ஏற்கனவே செயல்பட்டு வந்த 670 கடைகளுடன் புதிதாக 599 கடைகளும் திறக்கப்பட்டுள்ளன.

இந்த திட்டத்தினால்விலைவாசிகள் மிகவும் குறைந்து எல்லா அத்தியாவசியப் பண்டங்களும் தட்டுப்பாடின்றி தற்போது கிடைத்து வருகின்றன. இந்ததிட்டம் செயல்படுத்தியதன் பயனாக தனியார் கடைகளிலும்கூட அரிசி, மற்றும் இதர அத்தியாவசிய பொருள்களின் விலைகளைகுறைத்துவிற்பனை செய்யும் நிலை ஏற்பட்டுள்ளது.

### மூடவே மாட்டோம்

தட்டுப்பாடின்றி எல்லா அத்தியாவசியப் பொருள்களும் தற்போது கிடைப்பதால் மதுரைநகரில் கூட்டுறவு சங்கங்களின் மூலம் முன்பு நடத்தப்பட்டுவந்த நியாய விலைக்கடைகளின் வியாபாரம்சற்றுக்குறைந்துள்ள போதிலும் அதே கடைகளின் மூலம் ஏனைய நுகர்வோர் பொருள்களையும் குடிமைப் பொருள்களுடன் சேர்த்து அவற்றின் விற்பனையைஅதிகரிக்க ஆவன செய்யப்பட்டுள்ளது.

இதனால் மேற்படி கடைகள் மூடப்படாமல் தொடர்ந்து நடைபெறவும் பணியாளர்களுக்கு தொடர்ந்து வேலைவாய்ப்பு நீடிக்கச் செய்யவும் அரசு தக்க முன்னேற்பாடுகளை மேற்கொண்டுள்ளது.

இந்ததிட்டம் இந்த இரு மாவட்டங்களில் கூட்டுறவுத்துறை மூலம் நல்ல முறையில் செயல்பட்டு வருவதால் ஏற்கனவே அரசு அறிவித்த கொள்கைப்படி இதனை கோவை, சேலம் போன்ற மற்ற மாவட்டங்களில் ரூபாய் 3 கோடி அளவில் ஒதுக்கீடு செய்து நலிந்த மக்களுக்கும் கிராம மக்களுக்கும் டிசம்பர் மாதம் இறுதிக்குள் செயல்படுத்தமுனைந்துகூட்டுறவுத் துறை செயல்பட்டு வருகிறது.

இவ்வாறு அமைச்சர் கே. ஏ. கே. நிருபர்களிடம் கூறினார்.

**சினிமா செய்தி**

—4ம் பக்கம்

அண்ணா ஆட்டோ ஓட்டுநர் தொழில் கூட்டுறவு சங்க உறுப்பினர்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் ஆட்டோ வழங்கினர்.

# உதகை கால்நடை பண்ணை: முதல்வர் பார்வையிடுகிறார்

ஊட்டி, அக். 15- உதகமண்டலத்தில் உள்ள கால் நடைப்பண்ணையை தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் இம்மாதம் 18ம்தேதி காலை 11மணிக்குப் பார்வையிடுகிறார்.

### மருத்துவ மனையில் பெரியவர்: அமைச்சர் பி.டி.எஸ். பார்த்தார்

சென்னை, அக். 15- உடல்நலக்குறைவு காரணமாகசென்னை தனியார் மருத்துவமனை ஒன்றில் சிகிச்சை பெற்றுவரும் பெரியவர் எம். ஜி. சக்கரபாணியை அமைச்சர் பி டி சரஸ்வதி சென்று பார்த்தார்.

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் கோவை நீலகிரி மாவட்டங்களில் பல்வேறு நிகழ்ச்சிகளில்கலந்து கொள்ள இம்மாதம் 17 ம் தேதி கோவை வருகிறார்.

இம்மாதம் 18ஆம் தேதி உதக மண்டலத்தில் உள்ள கால்நடைப் பண்ணையை முதல்வர் புரட்சித் தலைவர் பார்வையிடுகிறார்.

உதகமண்டலம் கால் நடைப் பண்ணையில் 18 ஆம் தேதி காலை 11 மணிக்கு நடைபெறும். நிகழ்ச்சியில் முதல்வர் புரட்சித்தலைவர் பங்கேற்கிறார்.

ஆட்டம்மை தடுப்பு ஊசி, கோழிச்சளி நோய் கண்டுபிடிப்பு ஊசி ஆகியவற்றை வெளியிட்டு முதல்வர் புரட்சித் தலைவர் சிறப்புரையாற்றுகிறார்

### பி. டி. எஸ்.

இவ்விழாவிற்கு சமூகநல மற்றும் கால்நடை பராமரிப்புத்துறை அமைச்சர் பி, டி. சரஸ்வதி தலைமை தாங்குகிறார்.

விவசாயத்துறைச் செயலாளர் சேஷன் வரவேற்புரையாற்றுகிறார் விழா இறுதியில் கால்நடை பராமரிப்புத்துறை இணை இயக்குனர் ரங்கராஜன் நன்றி கூறுகிறார்.

இந்நிகழ்ச்சிக்குப் பிறகு விவசாயிகள் பயன்பெறும் திட்டத்தின் கீழ் விவசாயிகளுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் கால்நடைகளை வழங்கி சிறப்புரையாற்றுகிறார்.

**தலைமைக் கழக அறிவிப்பு:**

# சென்னை மாநகர தொகுதி அமைப்பாளர்கள் நியமனம்

சென்னை மாநகராட்சியில் உள்ள பின்கண்ட தொகுதிகளுக்கு சென்னை மாநகர கழக சீரமைப்பு குழுவின் பரிந்துரை மீது பின்கண்ட தோழர்களை தொகுதி அமைப்பாளர்களாக பொதுச்செயலாளர் புரட்சித்தலைவர் நியமித்துள்ளார்.

| | தொகுதி | அமைப்பாளர் |
|---|---|---|
| 1 | ராயபுரம் | திரு. ஏ. தாஸ். |
| 2 | துறைமுகம் | திரு. ஏ.வி. கிருஷ்ணமூர்த்தி |
| 3 | டாக்டர் ராதாகிருஷ்ணநகர் | திரு. வண்ணை தி. க. சண்முகம் |
| 4 | பூங்கா | திரு. ரா. துரைராசன் |
| 5 | பெரம்பூர் | திரு. ஜெயபால் |
| 6. | புரசைவாக்கம் | திரு தரங்கை கண்ணன் |
| 7. | எழும்பூர் | திரு. க. தெய்வசிகாமணி, மு |
| 8. | அண்ணா நகர் | திரு. வ. கோதண்டராமன் |
| 9. | ஆயிரம்விளக்கு | திரு. ப. அங்கமுத்து |
| 10. | சேப்பாக்கம் | திரு. வி. ராஜ்குமார் |
| 11. | திருவல்லிகேணி | திரு. மு. கிருஷ்ணன் |
| 12. | மயிலாப்பூர் | திரு. மயிலை தமிழ்மணி |

மேலே கண்ட தொகுதிகளில் உள்ள கழக சார்பு மன்ற தோழர்கள் பொதுச்செயலாளர் புரட்சித் தலைவர் அவர்களால் நியமிக்கப்பட்ட தொகுதி அமைப்பாளருடன் தொடர்பு கொண்டு கழகப் பணிகளை சீராகவும் செம்மையாகவும் ஆற்றுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

பொதுச்செயலாளர் புரட்சித்தலைவர் ஒப்புதலுடன் இந்த அறிவிப்பு வெளியிடப்படுகிறது.

**கே. ஏ. கிருஷ்ணசாமி**
அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

சென்னை
15-10-78

### புரட்சிதலைவர் பேசுகிறார்

சென்னை, அக். 15-தேசிய குடும்ப நல இருவாரவிழா துவக்கம் நாளை (திங்கட்கிழமை) மாலை 6-30 மணிக்குசென்னைப்பல்கலைக் கழக நூற்றாண்டு விழா மண்டபத்தில் நடக்கிறது. தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் விழாவைத்துவக்கி வைத்துப் பேசுகிறார்.

மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் திருச்சி ஆர். சவுந்தரராசன் விழாவிற்கு தலைமை வகிக்கிறார்.

நிதியமைச்சர் நாஞ்சிலார், செய்தி அறநிலையத் துறை அமைச்சர் ஆர்.எம். வீ. ஆகியோரும் விழாவில் கலந்துகொண்டு பேசுகின்றனர்.

விழாவிற்கு வைத்தியலிங்கம் வரவேற்புரையாற்றுகிறார் டாக்டர் எஸ். ஞானதேசிகன் நன்றி கூறுகிறார்.

# அமைச்சர் பி.டி.எஸ் கொடி ஏற்றினர்

சென்னை, அக்- 15- அமைச்சர் பி. டி. எஸ், இன்று(ஞாயிற்றுக்கிழமை) சென்னைதுறைமுகத்தொகுதியில் பல இடங்களில் கொடியேற்றி வைத்துப் பேசினார். கொண்டித் தோப்பு (28 வது வட்டம்) பகுதியில் வட்ட அமைப்பாளர் வி. சோ. சுந்தரம் தலைமையிலும் 17 வது வட்டம் ஏழு கிணறு தெருவில் பிகே கபூர்தலைமையிலும் குட்டிமேஸ்திரி தெருவில் நாதன் தலைமையிலும், வரதமுத்தியப்பன் தெருவில் இனயத்துல்லா தலைமையிலும் பந்தர்தெருவில் வ சு செல்லப்பன் தலைமையிலும் பி டி எஸ்கொடியேற்றிவைத்தார்

குடிசை மாற்று வாரிய தலைவர் ராமபத்திரன்,எம் பி ஜியாவுதீன் ஆகியோரும் நிகழ்ச்சிகளில் பங்கேற்றனர்.

## திட்டச்சேரி

17-10-78 செவ்வாய் மாலை 6 மணிக்கு அண்ணா அரங்கத்தில் நடைபெறும் முப்பெருவிழாக் கூட்டத்தில் பி. எம். எம். முகமது மீராஹுசேன் தலைமையில் பேசுவோர்: கோடம்பாக்கம் குமார், கோவி.நாராயணசாமி, இறையடியான், மு.ப.அ. இல்யாஸ், என். கண்ணப்பன். அசன்முகமது இ.மு. லத்தீப், எஸ் எம். செய்யது அலி, சிங்காரவேலு மற்றும் பலர்.

சென்னை லலித கலா அகாடமியில் இருந்த ஓவியங்களை முதல்வர் புரட்சித் தலைவர் பார்வையிட்டார் அருகில் அமைச்சர் அரங்கநாயகமும் உள்ளார்,

# மதுரை: ஏழைகளுக்கு வீட்டுவரி ரத்து செய்ய மாநகராட்சி முடிவு

**மதுரை, அக். 15- மதுரையில் ஏழைகளுக்கு வீட்டு வரியை ரத்து செய்வது என்றுமதுரைமாநகராட்சிகூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.**

மதுரை மாநகராட்சிக் கூட்டம் அறிஞர் அண்ணா மாளிகை பெரியார் கூடத்தில் நடைபெற்றது.

மேயர் முத்து தலைமை வகித்தார்.

மதுரை மாநகராட்சி நியமன உறுப்பினர் தேர்தலில் வெற்றிபெற்ற கழக உறுப்பினர் பெண் உறுப்பினர்களும் பதவி ஏற்றனர்.

பி, மருதையா, வி. பாண்டி, நெல்லை மாறன் மாயாண்டிபிரமிளாகாந்தி, மதனபாய், எஸ். கே. விஜயா என்ற விஜயலெட்சுமி. சரோஜினி ஜெயசீலி ஆகிய கழகஉறுப்பினர்கள் பதவி ஏற்றனர்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த நாகம்மாளும் பதவி ஏற்றார்.

புதிய உறுப்பினர்களுக்கு மேயர் முத்து பதவிப் பிரமாணம் செய்து வைத்தார்.

பதவிப் பிரமாணம் முடிந்த பிறகு நடந்த மாநகராட்சிக் கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின.

## தந்தை பெரியார் பெயர்

மதுரை எல்லிஸ் நகருக்கு தந்தை பெரியார் பெயர் சூட்டப்படும்.

ஆண்டுக்கு ரூ 281க்கு குறைந்த வருமானம்உள்ள ஏழைகளுக்கு வீட்டு வரியில் இருந்தும, நிலவரியில் இருந்தும் விலக்கு அளிக்கப்படும்.

தொழில்வரி வருமான வரி கட்டாத ரூ 119க்கு குறைவாக கட்டிடம் அல்லது வீடு வைத்து இருப்பவர்களுக்கு வரிவிலக்கு அளிக்கப்படும்.

வரி அப்பீல் குழுவை முன்புபோல மேயர் தலைமையில் 5 மாநகராட்சி உறுப்பினர்கள் அடங்கிய குழுவாக அமைக்க வேண்டும் என்று அரசைமன்றம் கேட்டுக்கொள்கிறது.

மற்றும் பல தீர்மானங்கள்நிறைவேற்றப்பட்டன.

# இதோ ஒரு முன்னுதாரணம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

சந்தர்ப்பவாத சாகசத்திற்காக நாம் பயன்படுத்துவதில்லை.

தொழிலாளர்களே தொழிற்சங்கத் தலைவர்களாக- நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்ற சீரிய முன்னுதாரணத்தை ஏற்படுத்த புரட்சித்தலைவரின் சீரிய வழிகாட்டுதலில் இயங்கும் அண்ணா தொழிற்சங்கப் பேரவை தன்னை அர்ப்பணித்துக்கொண்டு இருப்பது 58ஆண்டு இந்திய தொழிற்சங்க வரலாற்றில் ஒருபுதிய மைல்கல் ஆகும்.

யாரைத்தலைவராகத்தேர்ந்தெடுக்கவேண்டுமென்பதில் தொழிலாளர்களுக்கு உள்ள உரிமைகள் மறுக்கப்பட்டு தலைமை திணிக்கப் படும்போது ஏற்படுகிற அவலங்களை அனுதினமும் நாம அனுபவித்துக் கொண்டு இருககிறோம்.

"ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம்" என்று பலமுறை பலா சொன்னார்கள்...! ஆனால் செயதார்களா? இல்லை.., இல்லை...

தொழிற்சங்க பிரச்சினையில் தொழிலாளர்கள் நலனைப் பேணி பாதுகாப்பதைத் தவிர மீதமுள்ள விஷயங்களைப் பற்றிய சிந்தனையிலேயே காலத்தைக் கடத்த சில தலைவர்கள் முயற்சிக்கிறார்கள்

ஆனால் அண்ணா தொழிற்சங்கப்பேரவை- யதார்த்தமான - நடைமுறை சாத்தியமான- தொழிலாளர்களின் வாழ்வில் ஒளியூட்டததக்க பதினொரு தீர்மானங்களை நிறைவேறறியுள்ளது.

ஆளும் பொறுப்பிற்கு தாங்கள் சார்ந்த இயக்கம உயர்த்தபபட்ட நிலையிலும் அண்ணா தொழிற்சஙகப் பேரவை அடககமாக பணியாற்றுகிறது

பேரவைப் பொதுக்குழுவில் கலந்து கொண்ட ராகவானந்தம் "நான் கழகத் தொழிற்சங்கப் பிரிவுச் செயலாளர் என்ற முறையில்தான கலந்து கொள்கிறேன். அமைச்சர் என்ற முறையில் அல்ல" என்கிறார்.

அமைச்சர் பொன்னையன் "நான் உங்களில் ஒருவனாகவே வந்து இருக்கிறேன்" என்கிறார்

அண்ணா ஆட்டோ ரிக்ஷா ஓட்டுநர் தொழிற்கூட்டுறவுச் சங்க நிகழ்ச்சியில் நேற்று பேசும்போது கூட.

முதல்வர் புரட்சித் தலைவர், "ஜனநாயக ரீதியில் தேர்ந்தெடுக்கப் பட்ட தொழிற்சங்கத் தலைவர்களை மதிக்கிறோம்" என்று குறிப்பிடுகிறார்.

சொன்னதைச் செய்பவர் புரட்சித் தலைவர்- செய்ய முடிந்ததைச் சொல்பவர் புரட்சித்தலைவர்.

அண்ணாதொழிற்சங்கப் பேரவை பொதுக் குழு தீர்மானங்கள் நம்பிக்கை யளிக்கிறது.

(தொடரும்)

# கழகச் செய்திகள்

## வள்ளுவர் நகர்

15-10-78 ஞாயிறுமாலை 6 மணிக்கு பிடாரியார் கோவில் தெருவில் நடக்கும் தந்தை பெரியார் பேரறிஞர் அண்ணா பிறந்த நாள்விழாவில் பேசுவோர்: பார்லிமெண்டரி செயலாளர் ஐசரிவேலன், குடிசை மாற்று வாரியத்தலைவர் பி. ராமபத்திரன், புலவர் வேதா, தஞ்சைதமிழழகன் ஆலங்குடி சோமுராசன், கன்னியப்பன், மதுசூதனன், இரா. நாகராசன் கே. தாமோதரன், ஜோ. செல்வராஜ், ராதாகிருஷ்ணன், கணேசன், ராஜாராம் மற்றும் பலர்.

## அவிநாசி

16-10-78 திங்கள் மாலை 6மணிக்கு வடக்கு ரதவீதியில் நடக்கும் முப்பெரும் விழாவிற்கு ஆர். வி. கிரி தலைமை தாங்குகிறார். அமைச்சர் சவுந்தரராசன், நாடாளுமன்ற கழக உறுப்பினர் பி.எஸ்.ராமலிங்கம், கோவைத்தம்பி, அன்னூர் சாலிக், அவிநாசிராவணதாசன், அன்புச்செழியன், சின்னக்குட்டி, அ. தா. வேலு,ஏ.என்.முத்து,எம். ராகுல்அமீது. ஆகியோர் பேசுகின்றனர்.

## மண்டகுளத்தூர்

16- 10- 78 திங்கள் மாலை 6 மணிக்கு உயர்நிலைப்பள்ளி அருகில்வெங்கடேசன் தலைமையில் பேசுவோர்: ஜெயவேலு எம். எல். ஏ, வேணுகோபால் எம். பி,விசுவநாதன்எம்.பி மார்க்கபந்து எம். எல். ஏ, சந்திரன் எம். எல். ஏ, நெடுஞ்சேரலாதன், லட்சுமிமுத்து. நாராயணசாமி, அரங்கநாதன் மற்றும்பலர்.

## சைதை

16-10-78 திங்கள் மாலை 7மணிக்கு தேரடி திடலில் கேசவன் தலைமையில் பேசுவோர்: அமைச்சர் ஜி.ஆர். எட்மண்ட், அமைச்சர் காளிமுத்து,புலமைபித்தன் எம்.எல்.சி, ஜேப்பியார் ராமபத்திரன், வை. பெருமான்,தினகரன்.சா.துரைசாமி, ராமச்சந்திரன், கண்ணன், எம். ஆர். கோவிந்தராசன்,கோபால் முனுசாமி, லக்குமணன், பலராமன், ஜெயராமன், சிங்காரவேலு மற்றும் பலர்.

# பாவம் படிதாண்டிய பத்தினி - கருணாநிதி

கருணாநிதி ஊழல் செய்வாராம்- அதிகாரத்தைத் தவறாகப் பயன் படுத்தி அதிகாரிகளின் அறிவிப்பையும் மீறி கோடீஸ்வரர்களுக்குச் சலுகைகள் செய்வாராம்.

இவர் ஊழல் பேர் வழி என்று நீதிபதி அளித்த தீர்ப்பை வெளியே சொன்னால்- அதற்கு சூடாக பதிலளிப்பாராம்! இந்த ஊழல் பேர்வழியின் பதில்களைக் கேட்க ஒவ்வொரு நாளும் அதிக முட்டைகள் சாப்பிட வேண்டியிருக்குமாம்!

-திருடன் வக்கீல் ஆகிற காலம் இது!

கருணாநிதியையும் அவரது சொந்தக் குடும்பத்தையும் கொழுக்க வைக்கும் வரப்பிரசாதமாக அமைந்த திட்டங்களில் ஒன்று வீராணம் திட்டம்!

கருணாநிதியின் ஊழலால் இதில் பாழான மக்கள் பணம் ரூ 22 கோடியே 80 லட்சம்!

அண்ணா சாலையில் கருணாநிதி ஐந்தடுக்கு மாளிகை கட்ட சரக்குகள் சப்ளை செய்தவர்கள் வீராணம் காண்ட்ராக்டர்கள்-சத்தியநாராயணா பிரதர்ஸ்!

அந்த நிறுவனத்திடமிருந்து லட்சம் லட்சமாக பணம் வாங்கி சுருட்டியதும் கருணாநிதியே என்பது குற்றச்சாட்டு!

இதுபற்றி விசாரணை செய்த சர்க்காரியா கமிஷன், கருணாநிதியை சுத்த சுயம்பிரகாசம் என்று தீர்ப்பு கூறியதாக கருணாநிதி தனது உடன்பிறப்புக்களின் கண்களில் மண்ணைத் தூவி இருக்கிறார்!

எந்தக் கருணாநிதி?

-"வீராணம் திட்டத்தில் ஊழல் புரிந்திருக்கிறார்" என்று கமிஷனால் தீர்ப்பளிக்கப்பட்ட கருணாநிதி!

"தனது முதலமைச்சர் பதவியை தவறாகப் பயன்படுத்தி, (abusing) சத்திய நாராயணா பிரதர்சுக்கு காண்ட்ராக்ட் வழங்க முறைகேடாக ஒப்பந்தப் புள்ளி பரிவுரைகளை தயார் செய்து தாக்கல் செய்யுமாறு தலைமைப் பொறியாளர் உசேனுக்கு கருணாநிதி உத்தரவிட்டிருக்கிறார்".

இப்படி மட்டும் கருணாநிதி ஊழல் செய்ததாக நீதிபதி கூறவில்லை. இன்னமும் கூறுகிறார்.

"கருணாநிதியின் இசைவோடு சாதிக் பாட்சா செயல்பட்டு சத்தியநாராயணாபிரதர்சின் ஒப்பந்தப்புள்ளியை அவசரம் அவசரமாக ஏற்றுக்கொண்டுள்ளார். கான்கீரிட் குழாய் தயாரிப்பு திறன் அந்த நிறுவனத்துக்கு உண்டா என்பதைகூட சரியாக தெரிந்து கொள்ளாமல் காண்ட்ராக்ட் கொடுத்துவிட்டார் மத்திய பொதுப் பொறியியல் நிறுவனதொழில் நுட்ப வல்லுனர் நிர்வாகப் பொறியாளர் சிவராமன் ஆகியோர் அளித்த எச்சரிக்கைகளையும், குறிப்புகளையும் பொருட்படுததாமல் அவதூறாக புறக்கணிதது (Contemptuous Disregard) அந்த நிறுவனததுக்கு காண்ட்ராக்ட் கொடுததிருக்கிறார்.

தீர்ப்பு அறிக்கை (ஆங்கிலம்)
(பக்கம் 128)

--இவ்வாறு நீதிபதி சர்க்காரியா தமது அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்.

-ஆனாலும்கருணாநிதி என்ன சொல்கிறார்? கையூட்டு பணம் பெற்றதாகக் கூறப்படும் குற்றச்சாட்டு நிரூபிக்கப்படவில்லை என்று சுயதிருப்தி கொள்கிறார்!

"படிதாண்டிய பத்தினி தான்! ஆனால் பணம் வாங்கியது சந்தேகமின்றி நிரூபணமாகவில்லை" என்பதை வைத்து பெருமைப்படுகிறவனைப் பற்றி என்ன சொல்வது?

நீதிபதி தீர்ப்பையும் திரித்துக்கூறும் கருணாநிதிக்கு இன்னமும் பதிலளிக்கவேண்டி வந்தால் மூஞ்சுக்கு முட்டை தேய்க்கிற இந்த "பிஸ்தா" முட்டை தின்பதிலேதான் பிறகு காலத்தைக் கழிக்க வேண்டிவரும்!

இதுவெறும் எச்சரிக்கையல்ல. உண்மைகளின் முழக்கம்! அவ்வளவே!

# ஆட்டோ டிரைவர்களுக்கு நாஞ்சிலார் அறிவுரை

சென்னை, ஆக. 15-“ அண்ணா ஆட்டோ ரிக்ஷா டிரைவர்கள் சங்கத்தைச் சேர்ந்தவர்கள்மற்றவர்களுக்கு முன்னுதாரணமாகத் திகழவேண்டும்” என்று நிதியமைச்சர் நாஞ்சிலார் கூறினார்.

1976ம் ஆண்டில் இந்த சங்கம் துவக்கப்பட்ட நேரத்தில் ஏறத்தாழ 13 லட்சம் ரூபாய் வரை கூட்டுறவு வங்கியிலே கடன் பெற்று 65 ரிக்ஷாக்களைப் பெற்று இருக்கிறார்கள்.

இப்பொழுது இந்தவிழாவில் 35ஆட்டோரிக்ஷாக்கள் வழங்கப்பட இருக்கின்றன. இன்னும் சில தினங்களில் 15ரிக்ஷாக்கள்வழங்கப்பட இருக்கின்றன.

இந்த சங்கத்தை ஆரம்பித்த போது,இது வெற்றிகரமாக நடக்குமா? மற்ற சங்கங்களால் தாக்குண்டு நலிந்து போகுமா என்று எண்ணினார்கள்.

அண்ணா அவர்களின் பெயரில் உள்ள இந்த சங்கத்தை திறம்பட நடத்தினால் தான் சிறப்புடையது என்று நடத்தி வந்தவர்களுக்கு என்னுடைய பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இதே தொழிலில் ஆட்டோரிக்ஷா ஓட்டி, சமுதாயத்திற்கு தொண்டு செய்து ஆயிரம் முதலாளிகள் செய்ய முடியாததை நீங்கள் செய்கிறீர்கள்.

## நேர்மை நாணயம்

இன்றைக்கு ஆட்டோ வைத்துள்ள நீங்கள் நாளைக்கு டாக்ஸிவாங்கி, அதைவிரிவுபடுத்திபங்களாகட்டும் எண்ணம் உங்களுக்கு இருக்கக்கூடும்.

இரவு நேரத்தில் சினிமாவுக்குப் போய் விட்டு வீட்டிற்குப் போவதற்கு ஆட்டோவைக் கூப்பிட்டால் அதிகக் கட்டணம் கேட்கிறார்கள் என்று தொலைக்காட்சி (டெலிவிஷனில்) உரையாடலில்கூறினார்கள்.

நான் உள்ளூர நினைத்துக் கொண்டேன் அண்ணா ஆட்டோ சங்கத்தைச் சேர்ந்தவர்கள் இப்படி கேட்டிருக்க மாட்டார்கள் என்று. அதை நீங்கள் கடைப் பிடிக்க வேண்டும். உறுதிப்படுத்த வேண்டும்.

அண்ணா ஆட்டோ ரிக்ஷாக்களை நம்பி எந்த நேரத்திலும் எந்த இடத்திற்கும் போகலாம் என்று மக்கள் கருதுகிற உணர்வினை நீங்கள் ஏற்படுத்த வேண்டும்.

அதிகக் கட்டணத்தின் மூலம் கிடைக்கும் அற்பப் பணத்தை பெரிதாக கருத மாட்டீர்கள் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

இவர்கள் நாணயமான தொழிலாளியாக இருக்கிறார்கள் என்ற பெயரைசேகரித்துக்கொள்ளவேண்டும்.

ஆட்டோ குறுகலாக இருப்பதால் அதற்கு ஒரு வசதி உண்டு. சின்னஞ்சிறு வாகனமாக இருப்பதால் கார்கள் போகமுடியாத பாதைகளில் எல்லாம் போக முடியும்.

## ஒற்றுமை அவசியம்

ஆனால் குறுக்கு வழியில் வேகமாக போய் சில சமயம் தடுத்து நிறுத்த முடியாமல் ஏற்படுகின்ற விபரீத விளைவுகள் மக்களிடத்தில் அச்சத்தை ஏற்படுத்தி இருக்கிறது. இதைத் தவிர்க்க வேண்டும். அந்த அச்சத்தை போக்குகிற நிலையில் ஓட்டவேண்டும்.

குறிப்பிட்ட சங்கத்திற்கு சலுகைஅளிக்கப்பட்டதாக மற்ற சங்கங்கள் எடுத்துக் கொள்ளக் கூடாது. மற்ற சங்கங்களைச்சேர்ந்தவர்களும் இதே அடிப்படையில் சேவை செய்தால் புரட்சித்தலைவர் நிச்சயம் உதவி செய்வார்.

உங்களுக்குள்ளே இருக்கின்ற ஒற்றுமை அவசியமானது. இருக்கின்ற ஒற்றுமையை சிதைய விடாமல் ஏராளமான உறுப்பினர்களை சேர்க்க வேண்டும்.

இதிலே இருக்கின்றமற்ற உறுப்பினர்கள் தங்களுக்கு ஆட்டோ கிடைக்க வில்லையே என்று ஏங்காமல் அடுத்த கட்டம் நம்மை நோக்கி காத்திருக்கிறது

என்று திருப்தி அடையுங்கள்.

பணத்தை வங்கியில் சரியாக திருப்பி செலுத்திவிடுகிறீர்கள். சரியாக செலுத்தாவிட்டால்பணம் கொடுப்பவர்கள் பக்கத்திலேயே வர மாட்டார்கள். என்பதைஉணர்ந்து செயல்படுகிறீர்கள். அது குறித்து எனது மகிழ்ச்சியைக் தெரிவித்துக் கொள்கிறேன்

இவ்வாறு நிதியமைச்சர் நாஞ்சிலார் பேசினார்.

சென்னை மாநகராட்சி குடிசை பகுதியை அமைச்சர் காளிமுத்து சுற்றிப்பார்த்தார். மாநகராட்சி ஆணையாளர் பெரியசாமி, உதவி ஆணையாளர் குணசேகரன் ஆகியோரும் படத்தில் உள்ளனர்.

## ஜெகஜீவன் பிரதமர் ஆனால்...

நாடாளுமன்ற மைய மண்டபத்தில் நடந்த உரையாடல் இது:-

கேள்வி:- ஜகஜீவன்ராம்பிரதமர் ஆனால் அவரது முதல் நடவடிக்கை என்னவாக இருக்கும்?

பதில்:- உடனடியாக மது விலக்கை ரத்து செய்வார். ஆங்கப்படமெடுப்பதையும் தடை செய்வார்.

இந்த பதிலைச் சொன்னவர் மாநிலங்களவை உறுப்பினரும் ஜனதா தலைவருமான பிலுமோடி.

(ஜகஜீவன் மகன் சுரேஷ் குமாரும் சுஸ்மா என்ற பெண்ணும் எடுத்த நிர்வாணப் படங்கள் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது தெரிந்ததே.)

## அண்ணா சிலை திறப்பு

## அமைச்சர்கள் பங்கேற்பு

சென்னை, அக். 15- வருகிற 17- ந் தேதி செவ்வாய்க் கிழமை மாலை 7 மணிக்கு குரோம்பேட்டை காவல்நிலையம் அருகே பேரறிஞர் அண்ணாசிலை திறந்து வைக்கப்படுகிறது.

விழாவிற்கு கே. எம். அப்துல் ரசாக் எம். எல். ஏ. தலைமை வகிக்கிறார். அமைச்சர் ஆர். எம். வீ. அண்ணா சிலையை திறந்துவைக்கிறார். அமைச்சர் காளிமுத்து, நாடாளுமன்ற கழக உறுப்பினர் இரா. மோகனரங்கம், மு. பச்சையப்பன், கே. ஜி. கார்மேகம், மு. ராமசாமி ஆகியோர் பேசுகின்றனர்.

## கூட்டுறவு நூற்பாலை ஊழியர்களுக்கு

# ரூ. 44 லட்சம் போனஸ்

## அரசேற்ற நலிந்த ஆலை ஊழியரும் பயன்பெறுவர்

சென்னை, அக். 15- தமிழ்நாட்டில் உள்ள எல்லா கூட்டுறவு நூற்பாலை ஊழியர்களுக்கும் 11 33 சதவீத போனஸ் வழங்கப்படுகிறது 8350 நூற்பாலை ஊழியர்கள் 44லட்சம ரூபாயை போனசாக பெறுகிறார்கள்.

இதுபற்றி தமிழக அரசு விடுத்த பத்திரிக்கை குறிப்பில் கூறியிருப்பதாவது;-

“கடந்த ஆண்டில் (1977)எல்லாகூட்டுறவுநூற்பாலையிலும் ஊழியர்கள் எவ்வித இடைஞ்சலையும் விளைவிக்காமல் நல்ல முறையில் பணியாற்றினார்கள். இதைத் தொடர்ந்து கூட்டுறவு நூற்பாலை ஊழியர்களுக்கு 8.33 சதவீத போனசும் கூடுதலாக 3 சதவீத போனசும் வழங்கப்படுகிறது.

கூட்டுறவு நூற்பாலைகளில் பணிபுரியும் 8 ஆயிரத்து 350 ஊழியர்கள் போனசாக மொத்தம் 44 லட்சம் ரூபாய் பெறுகிறார்கள். நாளை (16-ந் தேதி)க் குள் இந்த போனஸ் தொகை முழுவதும் பட்டுவாடா செய்யப்பட்டுவிடும்.

கடந்த ஏழாந் தேதி தென்னிந்திய மில் அதிபர்கள் சங்கத்தில் கையெழுத்தான ஒப்பந்தத்தின்படி இந்த போனஸ் வழங்கப்படுகிறது.

அரசு உதவியுடன் இயங்கி வரும் நலிந்த நூற்பாலைஊழியர்களுக்கும் போனஸ்வழங்கப்படுகிறது. இதன்படி நலிந்தநூற்பாலைகளில் பணிபுரியும் 7 ஆயிரத்து 200 ஊழியர்களும்போனஸ்பெறுவார்கள்

## பால்வள அண்ணா தொழிலாளர் சங்க தோழர்களுக்கு

தமிழ்நாடு பால்வளநிறுவன அண்ணா தொழிற்சங்க பொது உறுப்பினர்கள் கூட்டம் இன்று (ஞாயிறு) மாலை 5-30மணிக்கு சட்டமன்ற உறுப்பினா விடுதியின்முன்புநடக்கிறது. சங்க நிர்வாகிகளும் அனைத்து தொழிலாளர்களும் தவறுமல் கலந்து கொள்ளுமாறு சங்க பொதுச்செயலாளர் க.புருஷோத்தமன்கேட்டுக் கொண்டுள்ளார்.

## ம. பொ. சி. ஜெய்ப்பூர் செல்கிறார்

சென்னை, அக். 15- தமிழக சட்ட மன்ற மேலவைத் தலைவர் ம.பொ.சி. அக்டோபர் 21,22,23 ஆகிய தேதிகளில் ராஜஸ்தான் மாநிலத்தின் தலைநகரான ஜெய்ப்பூரில் நடைபெறும் அகில இந்தியசட்டமன்றப் பேரவை- மேலவைத்தலைவர்கள் மாநாட்டில்கலந்து கொள்கிறார் சிலம்புச்செல்வர் அக்டோபர் 20ஆம் தேதி காலை சென்னையிலிருந்து புதுடெல்லிசெல்கிறார்.

மாநாடுமுடிந்ததும் டெல்லிக்குத் திரும்பி, காஷ்மீர் மாநிலமேலவைத் தலைவரின்அழைப்பைஏற்று காஷ்மீர் சென்று, அங்கு ஒருநாள் தங்குகிறார். அக்டோபர் 26- ஆம் தேதி காலை விமானம் மூலம் சென்னை திரும்புகிறார்.

புதுடெல்லியில் தங்கியிருக்கும் போது சிலம்புச் செல்வர், பிரதமர் தேசாய். இந்தியக் குடியரசுத்தலைவர் சஞ்சீவ ரெட்டிஇந்தியக்குடியரசுத் துணைத்தலைவர் ஜாட்டி. முன்னாள்பிரதமர் இந்திரா காந்தி ஆகியோரைச் சந்தித்துப் பேசுவார்.

## ஐ.நா.வில் வாஜ்பாயியின் இந்திப் பேச்சு:

# தீக்கதிர் கடும் கண்டனம்

இந்திய வெளிவிவகார அமைச்சர் வாஜ்பாயி. ஐ. நா. சபையில் தமது தமது உரையை இந்தியில் பேசியதைக் கண்டித்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அதிகாரபூர்வமான நாளேடு “தீக்கதிர்” தலையங்கம் தீட்டியுள்ளது,

இது தேவையற்ற வீண்வேலை அபாயகரமான வீண்வேலை இந்திய ஒற்றுமைக்கு ஊறுவிளைவிக்கும் வேலை என “தீக்கதிர்” சாடியுள்ளது.

இந்தியாவின் வெளிவிவகார அமைச்சர் ஏ. பி. வாஜ்பாயி அக்டோபர் 11-ந்தேதியன்று ஐக்கிய நாட்டு சபையில் பொதுவான விவாதத்தில் பேசும் பொழுது இந்தியில் பேசியிருக்கிறார்.

வாஜ்பாயி நன்றாக ஆங்கிலம் அறிந்தவர். சரளமாக அம்மொழியில் பேசும் திறமை உள்ளவர். அவ்வாறிருந்தும் ஒரு உலக அரங்கில் இந்தி மொழியில் பேச வேண்டிய அவசியம் என்ன? இந்தியாவில் உள்ள இந்தி மொழி பேசும் மக்களின் அபிமானத்தைப பெறவும் தீவிர இந்தி ஆதரவாளர்களின் பாராட்டைப் பெறவும்தானே?

ஐ.நா.சபையின் ஒவ்வொரு கூட்டத்தொடருக்கும் இந்திய அரசாங்கம் வெளிவிவகார அமைச்சர் தலைமையில் ஒரு தூதுக் குழுவை அனுப்பிவைப்பது வழக்கம்.

இந்த தூதுக்குழுவில் உள்ளவர்கள் பல்வேறு மாநிலங்களைச் சேர்ந்தவர்கள். பொதுவாக இவர்கள் அனைவரும் இதுவரை ஆங்கிலத்திலேயே பேசி வந்திருக்கின்றனர்.

ஆனால் இப்பொழுது வாஜ்பாயி புதிய முறையைக் கையாள்கிறார்; இந்தியில் பேசி வருகிறார். அந்தப் பேச்சின் ஆங்கில மொழியாக்கம் பத்திரிகைகளுக்குத் தரப்பட்டிருக்கிறது.

இந்தியாவின் “தேசிய மொழியாக இந்தியைத்” திணிப்பதற்கு இந்நாட்டில் உள்ள மிகப் பெருவாரியான மக்கள் தங்களுடைய கடும் எதிர்ப்புக்களைத் தெரிவித்துள்ளனர்.

அனைத்து தேசியமொழிகளுக்கும் சம அந்தஸ்து! இந்தி பேசாத மக்கள் விரும்பும் காலம்வரை இணைப்பு மொழியாக ஆங்கிலம் நீடிக்கப்படவேண்டும் என்ற வாக்குறுதி அமலாக்கப்பட வேண்டும் என்று விரும்புகின்றனர்.

இந்நிலையில் வாஜ்பாயி ஐ. நா. சபையில் இந்தியில் பேசுவதைப் பார்க்கும் பொழுது, ஏதோ “இந்திதான் இந்தியாவின் ஆட்சி மொழி” என்ற தோற்றத்தை உருவாக்க முயற்சிப்பது போல் தெரிகிறது. இது வேண்டாத, அபாயகரமான வீண் வேலை,

ஐ நா.விற்குச்செல்லும் இந்திய தூதுக்குழுவின் உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் அவரவர் தாய்மொழியில் பேசுவதற்கு இந்திய அரசாங்கம் ஏற்பாடு செய்ய முடியாத நிலையில் வாஜ்பாயி மட்டும் இந்தியில் பேச அனுமதிப்பது இந்திய ஒற்றுமைக்கு உதவிகரமாயிராது. மாறாக தொல்லையில் பேசய் முடியும்.

இவ்வாறு “தீக்கதிர்” தலையங்கம் தீட்டியுள்ளது.







தங்கமணி பப்ளிகேஷனுக்காக275, அவ்வை சண்முகம்சாலை, சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர்: பி. தங்கராஜன், நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை, சென்னை-600004.
ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி

## அண்ணு

# எம் பி மணி வசனம் எழுதுகிருர்

மகமாயி புரொடக்ஷன்ஸ் தயாரிக்கும் 'பூமியில் சொர்க்கம்' என்ற வண்ணப் படத்திற்கு பத்திரிகையாளர் எம். பி. மணி உரையாடல்களை எழுதுகிருர்.

வி. பி. ராஜன் எழுதியுள்ள கதைக்கு எம். பி. மணி உரையாடல் எழுதுகிருர். கங்கை அமரன் இசையமைக்கிருர். கண்ணதாசன், கங்கை அமரன் இருவரும் பாடல்களை எழுதுகின்றனர்.

பாஸ்கர்ராவ் ஒளிப்பதிவு செய்கிருர்.

திரைக்கதை அமைத்து என். சம்பந்தம் டைரக்ட் செய்கிருர். தயாரிப்பு மேற்பார்வையை கே. ரகுநாதன் கவனிக்கிருர்.

கிராமியச் சூழ்நிலையை அடிப்படையாக வைத்து உருவாக்கப்பட்டுள்ள இதன்படப்பிடிப்பு மதுரை மாவட்டத்தில் நடைபெற இருக்கிறது.

'நான் யார் நான் யார்?' பாப்பாத்தி படத்தில் கே. கண்ணன்

## சண்டைக் காட்சி: நடிகர் தலையில் படுகாயம்

சினிமாலயா சார்பில் 24 தொழிலாளர்கள் கூட்டு முயற்சியில் 'ராஜ ராஜேஸ்வரி' என்ற வண்ணப் படத்தைத்தயாரித்து வருகின்றனர்.

இந்தப் படத்திற்காக முத்துராமனும் சந்திரகாந்தும்மோதும்காட்சிபடமாக்கப்பட்டது. முத்துராமன் சந்திரகாந்தை அடித்தார். அவர் சாலை ஓரத்தில் நின்று கொண்டிருந்த பானை வண்டி மீது போய் மோதி விழுந்தார். வண்டியில் இருந்த சுமார் 400 பானைகளும் அவர்மீது விழுந்ததினுல் தலையில் பலமாக அடிபட்டு ரத்தம் பீறிட்டது. உடனே அவரை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்று சிகிச்சை அளித்தனர்.

புலவர் புலமைப்பித்தன் வசனம் பாடல்களை எழுதுகிருர். கதை எழுதி சம்பந்தம் டைரக்ட் செய்கிருர். கே. ரகுநாதன் தயாரிப்பு மேற்பார்வையைக் கவனிக்கிருர்.



# 'நான் நன்றி சொல்வேன்'

என். பி. எம். பிலிம் சார் 'நான் நன்றி சொல்வேன்' என்ற படத்தைத் தயாரித்து வருகின்றனர். இந்தப்படத்தில் முற்றிலும் மாறுபட்ட குணச்சித்திர வேடம் ஒன்றில் ஐசரி வேலன் நடிக்கிருர்.

தவத்திரு ராமதாஸ் சுவாமிகள் படப்பிடிப்பை துவக்கிவைத்து வாழ்த்திஞர்.

ஐசரிவேலன், ஸ்ரீபிரியா, சிவச்சந்திரன் நடித்த காட்சிகள் படமாக்கப்பட்டன.

இந்தப்படத்தின் மூலம் ஒரு கதாசிரியர் டைரக்டராகிருர். பனசைமணியன் கதை வசனம் எழுதி முதன் முறையாக டைரக்ட் செய்கிருர்.

மேஜர் சுந்தர்ராஜன், கண்ணன், அசோகன், லட்சுமிஸ்ரீ, சத்தியப்பிரியா கே. ஏ. தங்கவேலு, மூர்த்தி சண்முகசுந்தரம், கேசவராம், கிரிநாத், காந்திமதி சிதாலட்சுமி, மனோரமா ஆகியோரும் நடிக்கின்றனர். கலையைஅங்கமுத்துகவனிக்கிருர் கண்ணதாசன் புலவர் புலமைப்பித்தன், கவிஞர் நா. காமராசன், முத்துலிங்கம் பாடல்களை எழுதுகின்றனர். சியாம் இசையமைக்கிருர்.

இதுவரையில் தமிழகத்தில் உள்ள தயாரிப்பாளர்கள் இந்திப் படங்களைத் தயாரித்து வந்தனர். இந்த படத்தைத் தயாரிப்பவர் பம்பாயைச்சேர்ந்ததொழிலதிபர் பெயர்-நித்தின் பவானி அவர் தயாரிக்கும்! முதல்படம் தமிழ்ப்படம்.

ஐசரிவேலனுடன் சுமார் ஐந்துஆண்டு காலம் வரையில் தொடர்ந்து நாடகங்களில்அவருடன் நடித்து வந்தவர் கிரிநாத். அவர் மூலமாக பம்பாயைச் சேர்ந்த தொழிலதிபர் நித்தின் பவானி ஐசரிவேலனுக்கு நண்பராஞர். பம்பாயில் மன்றங்களின் வளர்ச்சியில் ஆர்வம் காட்டி வருபவரான நித்தின் தமிழில் ஒரு படம் தயாரிக்க விரும்பி சென்னைக்கு வந்துள்ளார்.

✻ மன்னன் நெஞ்சம் இவள் துயிலும் மஞ்சமோ?

ஜேப்பியாரின் 'தங்க ரங்கன்' படத்தில் தேங்காய்சீனிவாசன், ஸ்ரீவித்யா.

✻ அணைப்பது அவர் என்று நினைத்து ஏமாற்றமோ?

'ஜம்பு' படத்தில் ஜெயகலா, விமலா.



# தமிழ்த் திரையுலகை வாழவிடுங்கள்...

● வாத்து பொன் முட்டையிடத் துவங்கியுள்ளதென்று அதன் வயிற்றைக்கிழித்து இருக்கின்ற முட்டைகளையெல்லாம் எடுத்துக் கொள்ள நினைத்த அவசரக்காரன் நிலையில் கலை உலகம் செல்லலாமா?

திரையுலகில் மாற்றமும்மறுமலர்ச்சியும் ஏற்படாதா என்று கலையுலகினர் எதிர்பார்த்துத் தவங்கிடந்தனர்.

தமிழ்ப்படங்கள் தயாரித்து என்ன பயன் என்ற நிலையில் படப்பிடிப்புஅரங்குகள் தூங்கிவழிந்தன. பல ஸ்டுடியோக்களில் உள்ள அரங்குகள் அரசாங்க அரிசிக் கிடங்குகளாக மாறின!

எப்போதாவது ஏதாவது ஒரு ஸ்டுடியோவில் படப்பிடிப்பு நடக்கிறது என்ற செய்தி கிடைக்கும். ஆவலோடு ஓடிச் சென்று பார்த்தால்- அது தெலுங்குப் படமாகவோ- மலையாளப் படமாகவோ இருக்கும்.

'அரிது... அரிது... தமிழ்ப் படப் பிடிப்பைக் காண்பது அரிது...!' என்று காலொடிய ஸ்டுடியோக்களைச் சுற்றி வந்தவர்கள் முணுமுணுக்கும் நிலை இருந்தது.

அப்படி இருந்து வந்த ஸ்டுடியோக்களில் இப்போது எத்தனை பரபரப்பு... எவ்வளவு சுறுசுறுப்பு...! எத்தனைப் படங்களுக்கு படப்பிடிப்பு...! யார் காரணம்?

இதற்கெல்லாம் காரணம்..புரட்சித் தலைவர் அரசு அறிவித்த ஒட்டு மொத்த வரி விதிப்பும், கலையுலகிற்கு அறிவித்த பல்வேறு சலுகைகளும் தான் என்பதை நல்லோரின் உள்ளங்கள் நன்றியுணர்வோடு அடிக்கடி சொல்லிப் பாராட்டிக் கொண்டிருக்கின்றன.

கலையுலகில் மாற்றமும் மறுமலர்ச்சியும் ஏற்பட்டு... இந்தத் தொழிலில் ஈடுபட்டிருந்த பல்லாயிரக் கணக்கானவர்கள் வாழ்வு வளம் பெற்றுள்ளது.

தமிழ்ப்படத்தை எடுத்தால் நஷ்டம் ஏற்படாது என்ற நம்பிக்கையோடு பலர் படம் எடுக்கத் துவங்கியுள்ளனர்.

வாரத்திற்கு நாட்கள் எத்தனை என்று கூறிவிடலாம். எத்தனை படத் துவக்கவிழாக்கள் என்று யாராலும் சொல்ல முடியாது. அவ்வளவு படங்கள் துவக்கப்படுகின்றன. வேகமாக பல படங்கள் வெளிவருகின்றன.

இதனுல் திரையரங்குகள் கிடைக்காமல் பல படங்கள் பகல் காட்சிகள் மட்டும் நடத்தும் நிலை சென்னைத் திருநகரில் உள்ளது.

நல்ல படங்கள்கூட தியேட்டர் கிடைக்காமல்சோதனைக்கு ஆளாகின்றன.

சென்னையில் எத்தனைதிரையரங்குகள் இருக்கின்றன...? அவைகளில் தமிழ்ப் படங்கள் எத்தனை திரையரங்குகளில் நடக்கின்றன? எத்தனைதிரையரங்குகளில் மற்ற மொழிப் படங்கள் நடக்கின்றன என்பது நாம் எல்லோரும் அறிந்த உண்மைதான்!

## முதல்வர் உவமை

முதல்வர் புரட்சித்தலைவர் ஒரு படத்துவக்க விழாவில் பேசும் போது அழகாக ஒரு உதாரணத்தைக் கூறினர்.

"அன்னை பட்டினியால் வாடும் போது, மற்றவர்களுக்கு சத்திரம் கட்டுகிறேன் என்று கூறுவது பெருமையல்ல."

இந்த உதாரணம் இதற்கும் பொருந்தும்.

தமிழ்ப் படங்களைத்திரையிட தியேட்டர்கள் இல்லாமல் தவிக்கும்போது, மற்றமொழிப் படங்களுக்கு இத்தனை திரையரங்குகளை சென்னையில் ஒதுக்க வேண்டியது அவசியமா?

தாயை(தமிழ்)பட்டினி போட்டு விட்டு,மற்றவர்களுக்குவிருந்துபடைக்கும் செயல் இதுஎன்று கூறுவதில்என்னதவறு?

தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபை சென்னையில் உள்ள திரையரங்குகள் 3 மாதத்திற்காவது தமிழ்ப் படங்களை ஓட்டவேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

தாய்க்கு கஞ்சி ஊற்றிவிட்டு மற்றவர்களுக்கு விருந்து படைக்கலாம் என்பது போன்ற தீர்மானம்!

மூன்று மாதம் என்பதை 9 மாதம் 6 மாதம் என்று தமிழ்ப் படங்களுக்கு ஒதுக்கி, மீதி உள்ளதை மற்ற மொழிப்படங்களுக்கு கொடுக்கவேண்டும் என்பது நமது கோரிக்கை.

தமிழப்படங்களுக்கு தியேட்டர்களைத் தருபவர்கள் யாரும் இலவசமாகக் கொடுக்கவில்லை. மற்ற மொழிப்படங்களுக்கு வாங்குவதைப்போலவே வாடகையும், மற்றவைகளையும் வாங்கிக் கொண்டு தான் கொடுக்கிருர்கள்.

அப்புறம் ஏன் தமிழ்ப் படங்கள் என்றால் குமட்டுகிறது? தமிழகத்தின் தலைநகரில் தமிழ்ப் படங்களுக்கே இந்த நிலை என்பது பெருமையாகவா இருக்கிறது?

## இது உண்மையா?

தீபாவளிக்கு சாதாரணமாக 4, 5 படங்கள் வெளிவரும். இந்த ஆண்டு 12 படங்கள் வெளிவருகின்றதாம்.

பைலட் பிரேம்நாத், தங்கரங்கன், காஞ்சி காமாட்சி, தாய் மேல் சத்தியம், தப்புதாளங்கள், மனிதரில் இத்தனை நிறங்களா?, கண்ணாமூச்சி, சிகப்பு ரோஜாக்கள், அதிர்ஷ்டக்காரன், அவள் அப்படித்தான், ஒரே முத்தம், வண்டிக்காரன்மகன் ஆகிய படங்கள் என்று தெரிகிறது.

இதில் 'பைலட் பிரேம்நாத்' என்ற படம் இந்தியா இலங்கைக் கூட்டுத் தயாரிப்பு. சிவாஜி கணேசன், இலங்கை நடிகை மாலினி பொன்சேகா, ஸ்ரீதேவி, விஜயகுமார், மேஜர் சுந்தர்ராஜன் என்று பெரும் நட்சத்திரங்கள் பலர் நடித்துள்ள பிரம்மாண்டமான படம். ஏ.சி. திருலோக்சந்தர் டைரக்ட் செய்துள்ளளார்.

இந்தப் படத்திற்கு அண்ணாசாலையில் திரையரங்கு கிடைக்காமல், அலங்கார் தியேட்டரில் பகல் காட்சி போடப் போவதாகக் கூறுகின்றனர்.

இது உண்மையென்ருல்...

இத்தகைய சூழ்நிலையை இனியும் வளர விடுவது சரியா என்பதை அனைவரும் சிந்திக்க வேண்டும்!

இந்தப்படத்திற்கே இத்தகைய நிலை என்கின்றபோது- மற்ற படங்களுக்கு திரையரங்குகள் எங்கிருந்து கிடைக்கும்?

இப்போதைய நிலை இப்படியே நீடித்தால்...

பகல் காட்சிக்கு ஒருபடம்- மாலைக் காட்சிக்கு ஒருபடம்-இரவுக்காட்சிக்கு ஒரு படம் என்று ஆகிவிடும்.

வேறு வழியே இல்லையென்ருல் நள்ளிரவுக்காட்சி என்று 2 மணிக்கு ஒரு படத்தைத் திரையிட வேண்டியதுதான்!

தியேட்டர் பற்றுக்குறையைப் போக்க, அரசு பல திரையரங்குகளைக் கட்டவேண்டும்,உதவிபுரிய வேண்டும் என்று அவசர அவசரமாக சிலர் ஆலோசனைகளைக் கூறுகின்றனர்.

அரசு கட்டுவது இருக்கட்டும்- இருக்கின்ற திரையரங்குகளில் தமிழ்ப் படங்களைத் திரையிடுவதுகுறித்து முதலில் முடிவு செய்யுங்கள்.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் படத் துவக்க விழாக்கள் நாள்தோறும் நடந்த வண்ணம் உள்ளன,

விஜயதசமியன்று பிரசாத் ஸ்டுடியோவில் அம்மன் கிரியேஷன்ஸ் தயாரிக்கும் 'கன்னிப் பருவத்திலே' 'சின்ன சின்ன வீடு கட்டி' என்ற இரு படங்கள், ஜெயவேல் புரொடக்ஷன்ஸ் தயாரிக்கும் 'ஒரு மரத்துப் பறவைகள்', ராஜ்குமார் நடிக்கும் கன்னடப்படம் ஆகிய நான்கு படங்களின் துவக்க விழாவும் ஒரே ஒலிப்பதிவுக்கூடத்தில் நடைபெற்றன.

## -: நாகை தருமன் :-

ஏவி. எம். ஸ்டுடியோவில் காலை 9 மணி முதல் மதியம் 2 மணிவரை ஒரு கால்ஷீட், மதியம் 2 மணிமுதல் இரவு 9 மணிவரை ஒரு கால்ஷீட். ஆனுல், மதியம் 2 மணி முதல் 6 மணி வரை கால்ஷீட் ஒன்றும், 6 மணி முதல் 9 மணி வரை ஒரு கால்ஷீட்டும் பிரித்துத் தரப்பட்டு ஒரே ஒலிப்பதிவுக் கட்டிடத்தில் மூன்று பாடல்கள் ஒரே நாளில் ஒலிப்பதிவாகின.

என். பி. எம். பிலிம்சாரின் 'நான் நன்றி சொல்வேன்', ரெயின்போ கிரியேஷன்சாரின் 'உச்சி வெயில்', ராஜ்கமல் கிரியேஷன்ஸ் 'சட்டம் என்ன செய்யும்?' தேவிப் பிரியா பிலிம்ஸ் 'வேலும் மயிலும் துணை' அன்பே சங்கீதா இன்னும் இரு படங்களின் துவக்க விழாக்கள் ஏவி. எம். ஸ்டுடியோவில் நடந்தன.

## வசந்த விழா

மெஜஸ்டிக் ஸ்டுடியோவில் பாலமுருகனின் மகன் சந்திரமோகன் டைரக்ட் செய்யும் 'வசந்தவிழா' படத்துவக்கவிழா நடைபெற்றது.

அமைச்சர் காளிமுத்து தலைமை வகித்தார், எஸ்.வி.சகஸ்ரநாமம், எஸ்.

(கடைசி பக்தி பார்க்க)

### தாமரை பூத்த குளம். இது தானே?



"பாபபாத்தி" படத்தில் ரதிதேவி

● நல்லது செய்ய முடியாவிட்டாலும் பிறருக்குத் தீமை செய்யாமலாவது இருங்கள் என்று பழந்தமிழ்ப் பாட்டு ஒன்று கூறுகின்றது. நம்மில் சிலரோ... நல்லது தான் செய்ய தெரியவில்லை... எதுவும் செய்யாமல் 'சும்மா' இருக்கவும் முடியவில்லை; தீமையாவது செய்கிறேன் என்று கூறுகினறனர்.

## பஞ்சகல்யாணி படத்தில் பயங்கரக்காட்சி



திருநெல்வேலி மாவட்டம் மேலப்பாளையத்தைச் சேர்ந்த 'வெள்ளை கலிபா ரிபாயி' தன்னுடைய சீடர்களுடன், யு எம் புரொடக்ஷன்ஸ் தயாரிக்கும் 'பஞ்ச கல்யாணி' வண்ணப் படத்தில்நடித்துள்ளார்.

இவரும் இவருடைய சீடர்களும் செய்யும் பல வேலைகள் உள்ள காட்சிகள் 'பஞ்ச கல்யாணி படத்திற்காக படமாக்கப்பட்டுள்ளன.

பயங்கர ஆயுதங்களைக் கொண்டு மனிதனின் உடலில் பல பாகங்களை வெட்டுவது. பயங்கர ஆயுதத்தால் கண்ணைக் குத்தி வெளியே எடுப்பது, நாக்கை அறுத்துக்கையில் வைத்துக் காண்பித்துப் பிறகு ஒட்ட வைப்பது, உடல் முழுவதும் கம்பிகளால் குத்திக் காட்டுவது போன்ற பல பயங்கரச் செயல்களை இவரும் இவருடைய சீடர்களும் பஞ்சகல்யாணி படத்தில் செய்து காண்பித்துள்ளனர்.

இப்படத்தை உடந்தை மணாளன் திரைக்கதைஎழுதி தயாரிக்க, வசனத்தை எஸ். அய்யாப்பிள்ளை எழுதுகிருர்.

கதை- டைரக்ஷனை என். சம்பந்தம் கவனிக்கிருர்.

## கலை விருந்து

## வாழவிடுங்கள்...

(5-பக்தி தொடர்ச்சி)

எஸ். ஆர்., ஒய். ஜி. பி., ஏவி. எம். ராஜன், அசோகன், முத்துராமலிங்கம் ஆகியோர் வாழ்த்திப் பேசினர்.

பாலமுருகன் நன்றி கூறிஞர். பாலமுருகன் கதைக்கு ஜான் பாபு உரையாடல் எழுதுகிருர்.

கவிஞர் முத்துலிங்கம் எழுதிய பாட்டுக்கு சந்திரபோஸ் இசையமைத்தார். ஜெயச்சந்திரன் சசிரேகா பாடினர்.

இவைகள் தவிர வாகினி சத்யா ஸ்டுடியோக்களில் பல துவக்க விழாக்கள் நடந்துள்ளன.

அருணுசலம் ஸ்டுடியோவில் இடம் இல்லாமல் மரத்தடிகளிலெல்லாம் துவக்க விழாக்கள் நடந்துள்ளன.

கலையுலகம் சீர்பெறுமா என்ற ஏக்கம் மறைந்து புரட்சித்தலைவர் அரசால் மகிழ்ச்சி மலர்ந்தது!

திரையுலகம் பொன் முட்டையிடும் வாத்து போல் ஆனது. இப்போது வாத்து முட்டையிடும் வரையில் காத்திராமல்... வயிற்றைக் கிழித்துபொன் முட்டைகளை எடுக்க நினைக்கும் அவசரக்காரர்கள்... ஆத்திரக்காரர்கள் அதிகமாகிவிட்டார்கள்...!

இவ்வளவு படங்களைத் துவக்குவதும் இத்தனை படங்கள் அடுத்தடுத்து வெளிவருவதும் சரிதானு?

அடுத்த இதழில் இது குறித்து மீண்டும் சிந்திப்போம்... சந்திப்போம்.

ஈருடல் ஒருடலானதோ?



அருணேஉள்ளம் படத்தில் விஜயா, விஜயகுமார்.

# தேங்காய் சீனிவாசன் திருமணம் கண்ணன் போட்ட நிபந்தனை

தங்கரங்கனும், அவனுடைய தாயும் கேசவலு வீட்டிற்குச் செல்கின்றனர்.

"தம்பி.. நீதான் இந்தக் குடும்பத்திற்குப்பெரியவர். உங்களைவிட்டா எங்களுக்கு யாரும் இல்லை. ரங்கனுக்கு வெள்ளிக்கிழமை கல்யாணம் தயவுசெய்து உன் மனைவி, குழந்தைகளோடு திருமணத்தில் கலந்துக்கணும்" என்று ரங்கனின் தாய் கூறுகிருள்.

"இந்தப்பொறுக்கி அந்த சிறுக்கியைக் கட்டிக்கிருன். அதுக்கு நான் வரணுமா? முடியவே முடியாது. அப்படி நான் வரணும்னு ஆயிரம்ரூபாய் பணம் கொடு. பூங்காவனம் நகையெல்லாம் மார்வாடிக்கடையிலே இருக்குது. அதை மீட்டு போட்டுக்கிட்டு நானும் பட்டுசட்டை, வேட்டி கட்டிக்கிட்டு வர்றேன்" என்று கேசவலு அலட்சியமாகக் கூறுகிருன்.

கேடி கேசவலுவாக கண்ணனும், தங்கரங்கனுக தேங்காய் சீனிவாசனும், மணமகளாக ஸ்ரீவித்யாவும், கேசவலு மனைவியாக விஜயகுமாரியும் நடித்தனர்.

கண்ணதாசன், கவிஞர் முத்துலிங்கம், கவிஞர் நா. காமராசன் ஆகியோர் பாடல்களுக்கு விஸ்வநாதன் இசையமைத்துள்ளார். கலையை அங்கமுத்து கவனிக்கிருர்.

எஸ். ஆர். தட்சிணுமூர்த்தி கதை வசனம் டைரக்ஷன் பொறுப்புக்களை ஏற்றுள்ளார்.

ஜேப்பியார் தயாரிக்கும் வண்ணப்படமான 'தங்க ரங்கன்' தீபாவளியன்று திரைக்கு வருகிறது.

"சினிமா உலகை ஒரு நடிகை சாடுகிருர்"

22-ம் தேதி இடம்பெறும்

✻ கன்னத்தில் முத்திரைப் பதிக்க எண்ணமோ?

'நினைவில் ஒரு மலர்' படத்தில் ரவிச்சந்திரன், சுமித்ரா.